# மலர்மாமணிக்குப் புகழ்ப் பூந்துணர்

**நவம்பர்16-குறள்நெறி இதழுடன் இணைப்பு**



மல

# பெ.அ.இளஞ்செழியன் அவர்கள்

தோற்றம் வைகாசி 28, 1969 / 10.06.1938

பிரிவு- ஐப்பசி 14,2052 / 31.10.2021]

# மலர்மாமணியின் புகழ்மணம்

புலவர்மாமணி பெருவளப்பூர் இளஞ்செழியனாரின் புகழ்மிக்க வரலாற்றைச் சொன்னால் சொல்லச்சொல்ல வாய் இனிக்கும்;கேட்கக் கேட்கச் செவிகளில் தேன் பாயும்;எண்ண எண்ணச் சிந்தையினிக்கும்.

எட்டாம் வகுப்புப் படிக்கும் பொழுது தால்மியாபுரம் பெயர் மாற்ற எதிர்ப்பான கல்லக்குடிப் போராட்டத்தில் பங்கேற்றுத் தண்டவாளத்தில் அமர்ந்தவர்; கோடை விடுமுறைகளில் கலைஞர் கருணாநிதியின் நச்சுக் கோப்பை, தூக்கு மேடை போன்ற சீர்திருத்த நாடகங்களை இயக்கியும், கதைத்தலைவன் வேடங்களில் நடித்தும், விழிப்புணர்வுப் பரப்புரையில் ஈடுபட்டவர்; பள்ளி இறுதி வகுப்பு பயிலும் பொழுது தேவிகுளம், பீர்மேடு கேரளத்தோடு இணைக்கப்பட்டதை எதிர்த்துத் தமிழகத்தில் நடந்த வேலை நிறுத்தத்தில் பள்ளி மாணாக்கர்களையும் பங்கேற்கச் செய்தவர்; மாணவப் பருவத்திலேயே தமிழ்க்காப்புப் பாதையில் நடைபோட்ட அவர்தாம் புலவர் இளஞ்செழியன்.

**இளைமையில் முளைத்த தமிழார்வம்**

இளமையில் திராவிட நாடு, திராவிடன், மன்றம், முரசொலி, விடுதலை, முதலான திராவிட இயக்க இதழ்களைப் படித்த ஆர்வம், இவரைத் தமிழுணர்வு கொள்ளச் செய்தது; பின்னாளில் இவர் இதழாசிரியராக விளங்க அடிப்படையாய் அமைந்தது. இலால்குடி பகுதியில் நடைபெறும் பொதுக்கூட்டங்களுக்குச் சென்று, சொற்பொழிவுகளைக் கேட்கும் ஆர்வம் இவரின் பேச்சத் திறமையையும் எழுத்துத்திறமையையும் வளர்த்தது.

**திருச்சிராப்பள்ளியில் தமிழ்ப்பணி**

1960 முதல் 1970 வரை திருச்சிராப்பள்ளியில் இருந்தார். இக்காலக்கட்டத்தில் இம்மாவட்டத்தில் நடைபெற்ற திருமணங்கள், ஆசிரியர் சங்கக் கூட்டங்கள், இலக்கிய நிகழ்ச்சிகள், அரசியல் மேடைகள், கவியரங்கங்கள், கருத்தரங்கங்கள், பட்டிமன்றங்கள் எனப் பலப்பல நிகழ்ச்சிகளில் கலந்து உரையாற்றியுள்ளார். பல திருமணங்களுக்குத் தலைமை தாங்கியும், திருமணங்களை நடத்தி வைத்தும் தமிழ் மரபுத் திருமணமுறையைப் பரப்பினார்.

1963இல் திருச்சியில் மதுரம் திடலில் திராவிட மாணவர் முன்னேற்றக் கழக ஏற்பாட்டில், இந்தி எதிர்ப்பு மாநாடு நடந்தது. இம் மாநாட்டின் நான்கு செயலாளர்களுள் ஒருவராக இருந்து மாநாட்டைச் சிறப்பாக நடத்தினார். மாநாட்டின் இரண்டாவது நாளில், "போர் மறவனே, புறப்படு" என்ற தலைப்பில் வீர முழக்க உரையாற்றினார். பேச்சின் இடையே "அண்ணாவுக்கு நரைத்துவிட்டது மீசை, அவருடைய கையிலே திராவிடத்தை வாங்கி நாம் ஒப்படைக்க வேண்டும். இது நமது இதய ஆசை" என்று முழங்கினார். முன்னிலை வகித்திருந்த பேரறிஞர் அண்ணா மீசையில் கை வைத்து, "அப்படியா" என்று உரத்த குரலிலே சொல்ல, மதுரம் திடல் அதிர்ந்ததைப் பசுமையாக நினைவாகக் கொண்டுள்ளார்.

**தமிழாசிரியப் பணி**

1966 முதல் 1973 வரை சமயபுரம் அ/மி மாரியம்மன் உயர்நிலைப் பள்ளி, திருச்சி புனித சூசையப்பர் கல்லூரி உயர்நிலைப் பள்ளி, திருச்சி ஃகீபர் பாதிரியார் உயர்நிலைப் பள்ளி, சென்னை எட்டியப்பர் உயர்நிலைப் பள்ளி ஆகியவற்றில் தமிழாசிரியராகப் பணியாற்றி, மாணாக்கர்களுக்குத் தமிழார்வத்தை ஊட்டினார்.

**இதழார்வம்**

இவரின் எழுத்தார்வம், கரந்தைப் புலவர் கல்லூரியில் பயின்று 1960இல் புலவர் பட்டம் பெற்றாலும் தமிழாசிரியப் பணிக்குச் செல்லாமல் தடுத்தது. இதழியல் துறையில் ஈடுபடச் செய்தது. எனவே, திருச்சிராப்பள்ளியில் 'போர்க்குரல்' என்னும் வார ஏட்டை 1960 முதல் 1967 வரை நடத்தினார். 1968இல் 'முகில்' என்கிற இலக்கிய மாத இதழை நடத்தினார். இதன் தொடக்கவிதழைப் பேராசிரியர் க. அன்பழகன் வெளியிட்டார்.சென்னையிலிருந்து முகில் இதழை1974 முதல் 1987 வரை நடத்தினார். சாந்தா பதிப்பக வெளியீடான 'கண்டுபிடி' கல்வி மாத இதழின் சிறப்பு ஆசிரியர் பொறுப்பில் 10 ஆண்டுகள் செயல்பட்டார். உலகத் தமிழர் மாமன்ற வெளியீடான 'உலகத் தமிழர் குரல்' இதழை ஆசிரியர் பொறுப்பு ஏற்று நடத்தினார். 2000 ஆம் ஆண்டில் "விண்முகில்" பல்சுவைக் காலாண்டு இதழை ஆசிரியராக இருந்து வெளியிட்டார்.

**உலக அமைப்புகள் உருவாக்கம்**

உலகத் தமிழர்களுக்கோர் உறவுப்பாலங்கள் அமைக்க 1991இல், ‘இந்திய – மலேசியப் பண்பாட்டுக் கழகம்’ அமைத்தார் 1999இல் ‘உலகத் தமிழ் ஒப்புரவாளர் பேரவை’ அமைத்தார். இரண்டு அமைப்புகளையும் நாவலர் இரா. நெடுஞ்செழியன் தலைமையில் தொடங்கினார். இவற்றின் சார்பாக இவர் திறம்பட நடத்திய நிகழ்ச்சிகள் எண்ணிக்கை ஐம்பதைத் தாண்டியுள்ளன.

1993இல் இந்திய – மலேசியப் பண்பாட்டுக் கழகத்தின் ஏற்பாட்டில், சென்னையில் “வையத்தமிழர் வாழ்விலே” என்ற தலைப்பில் ஒருநாள் மாநாடு நடத்தினார். மலேசியாவில் இருந்தும் தமிழ்நாட்டிலிருந்தும் 200 பேராளர்கள் கலந்து கொண்டனர்

1996இல் மேற்கூறிய இரண்டு அமைப்புகளின் ஏற்பாட்டில், , “உலகத் தமிழ் ஒப்புரவாளர் மாநாட்டை நடத்தினார். மலேசியா, சிங்கப்பூர், இந்தோனேசியா, சப்பான் நாடுகளிலிருந்து நூற்றுக்கும் மேற்பட்ட பேராளார்கள் வருகை தந்து சிறப்பித்தனர். **புலவர் இளஞ்செழியன் ஆற்றியுள்ள பணிகளில் இந்த மாநாடு ஒரு மகுடமாய் அமைந்தது.**

**மலர்மாமணி**

1967 முதல் கருத்தரங்க மலர்கள், இலக்கிய மலர்கள், நினைவு மலர்கள் முதலானவற்றைச் சிறப்பாகத் தொகுத்து வெளியிடும் பொறுப்பில் ஈடுபட்டார். நாடகப்பேராசியர் இராம. நடராசனார் மலர்(1967), முகில் கலைஞர் மலர்(1970), முகில் அண்ணா மலர்(1974), முகில் என்.வி. நடராசன் மலர்(1974), முகில் அன்பில் தருமலிங்கம் மலர்(1975), முகில் மன்னை ப. நாராயணசாமி மலர்(1975), முகில் பேராசிரியர் க. அன்பழகன் மலர் (1975), ‘கண்டுபிடி’ கல்வி இதழ் வைரவிழா மலர் (1978),கவிஞர் சுரதா மணிவிழா மலர்(1982) என்று இதழ் மலர்களை வெளியிட்டு வந்தார். கோலாலம்பூரில் 1987இல் நடந்த ஆறாம் உலகத் தமிழ் மாநாட்டின் மலர்க்குழுத் தலைவராக இருந்தார். மாநாட்டுமலரின் ஆசிரியராக இருந்து 650 பக்கங்கள் கொண்ட மலரைச் சிறப்பாக உருவாக்கினார். இதனால், ‘மலர்மாமணி’ என்று இவர் அழைக்கப்பெற்றார்

இந்த மலர்ச்சிறப்பைப் பார்த்தவர்கள், 1989இல் மொரீசியசுத் தீவில் நடந்த ஏழாம் உலகத் தமிழ் மாநாட்டு மலரை இவர் உருவாக்கினால் நன்றாக இருக்கும் என மொரிசியசு தமிழன்பர்கள் எண்ணினர். ஏழாம் உலகத் தமிழ் மாநாட்டு மலரைத் தன் சொந்தச் செலவில் உருவாக்கித் தந்தார். இவர் கை பட்டால் விழா மலர் மணக்கிறது என உணர்ந்தவர்கள் 1990இல் கோலாலம்பூரில் நடந்த முதல் உலகத் தமிழர் மாநாட்டு மலரையும் இவர் பொறுப்பில் விட்டனர்.

தொடர்ந்து, “மலர் வெளியீடா?-புலவர் இளஞ்செழியனை அழையுங்கள்” எனப் பொறுப்புகள் ஒப்படைக்கப்பட்டு, மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கங்களின் பேரவை மலர்(1991), இலங்கை அமைச்சர் சௌமிய தொன்டமான் முத்துவிழா மலர்(1992), திருக்குறளார் முத்துவிழா மலர்(1992), சட்டப்பேரவை முன்னாள் தலைவர் செல்லபாண்டியன் சிலை திறப்புவிழா சிறப்பு மலர்(1995), நாவலர் பவளவிழா மலர்(1995), உலகத்தமிழ் ஒப்புரவாளர் மாநாட்டு மலர்(1996), மலர்மாமணி இளஞ்செழியன் இலக்கியப் பொன்விழா மலர்(2001), தாய்லாந்து மலேசியா சிங்கப்பூர் இலக்கியப் பன்பாட்டுச் சுற்றுலா மலர்(2005), சிங்கப்பூர் தமிழ் எழுத்தாளர் கழக 30ஆம் ஆண்டு நிறைவு முத்துவிழா மலர்(2006), இளம்பாரி உ. கருணாகரன் மணிவிழா மலர்(2007), பகுத்தறிவுச் செம்மல் சோ. ஞானசுந்தரம் முதல் ஆண்டு நினைவு வண்ண மலர்(2008) எனப் பல மலர்களை உருவாக்கினார்.

**திருக்குறள் நெறி மாநாடு**

திருக்குறளார் வி. முனிசாமி இயக்குநராக இருந்த திருக்குறள் நெறி பரப்பு மையத்தின் சென்னை, திருச்சிராப்பள்ளி மாநாடுகளில் தொடர்பாளனாக இருந்து பலரும் பாராட்டும் வண்ணம் நற்பணியாற்றியுள்ளார்.

**நூலாக மலர்ந்த மாநாட்டுரை**

மதுரையில் 1992இல் நடந்த அ.இ.அ.தி.மு.க.வின் ‘வீர வரலாறு கூறும் வெற்றி மாநாட்டில்’, ‘வெள்ளுடை வேந்தர் முதல் வெற்றி வீராங்கனை வரை’ என்ற தலைப்பில் சொற்பொழிவு ஆற்றினார். இதற்கு நல்ல வரவேற்பு இருந்தமையால், இந்தத்

தலைப்பையொட்டி ‘புரட்சித்தலைவி ஒரு புறநானூறு’ என்னும் நூலை எழுதி வெளியிட்டார்.

**உலகத்தமிழ் மாநாடுகளில் பங்கேற்பு**

சென்னையில் நடந்த இரண்டாம் உலகத்தமிழ் மாநாடு (1968) மதுரையில் நடந்த ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு (1982) மலேசியாவில் நடந்த ஆறாம் உலகத் தமிழ் மாநாடு (1987), மொரீசியசுத் தீவில் நடந்த ஏழாம் உலகத் தமிழ் மாநாடு (1989), தஞ்சையில் நடந்த எட்டாம் உலகத் தமிழ் மாநாடு (1995) ஆகியவற்றில் கவியரங்குகளில் பங்கேற்றுச் சிறப்பித்துள்ளார்.

2010இல் கோவையில் நடந்த உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டில் மனைவி திருவாட்டி விசயலட்சுமி யுடன் பேராளராகக் கலந்து கொண்டார். மாநாட்டு ஆய்வரங்கம் ஒன்றில், “ஔவையார் முதல் அழ. வள்ளியப்பா வரை சிறுவர் இலக்கியம்” என்ற தலைப்பில் ஆய்வுக் கட்டுரை வழங்கினார்.

மலேசியா, சிங்கப்பூர், மொரீசியசு, தாய்லாந்து, அமெரிக்கா முதலான அயல் நாடுகளுக்குச் சென்று வந்துள்ளார். அங்கெல்லாம் தமிழின் சிறப்பு, தமிழர் பண்பாடுகளை இலக்கியக்கூட்டங்கள் வழிப் பரப்பினார்.

**கவியரங்கங்களில் பங்கேற்பு**

1990இல் கோலாலம்பூரில் உலகத் தமிழர் மாமன்றம் நடத்திய முதல் உலகத் தமிழர் மாநாட்டுக் கவியரங்கத்திற்கும், 2006இல் சிங்கப்பூரில் சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகத்தின் 30ஆம் ஆண்டு நிறைவு முத்தமிழ் விழாக் கவியரங்கத்திற்கும் தலைமை தாங்கியுள்ளார்.

**நூல்கள்**

தம் கவிதைகளைத் தொகுத்து இளஞ்செழியன் கவிதைகள் (முதல் தொகுதி) என வெளியிட்டார். இதற்குத் **தமிழக அரசின் இரண்டாம் பரிசு** கிடைத்தது(1991). இதற்கு வரவேற்பு இருந்தமையால் இளஞ்செழியன் கவிதைகள் (இரண்டாம் தொகுதி)-ஐயும் வெளியிட்டார். இவரது கவியரங்க நூல், ஒரு நன்பாட்டுப் புலவனாய்க் கவியரங்கேறி….!

என்பதாகும். பாவேந்தரின் சொல்லும் சுவையும் சிறார் இலக்கியத்திலும் தடம் பதித்து, மழலை மலர்கள்(குழந்தைப் பாடல்கள்), சங்கர் தமிழ் 1, 2(மழலையர் பாடநூல்கள்),சிறுவர் சிந்தனைக் கதைகள், பள்ளி மாணவர் பரிசுப் பேச்சுக்கள் (தொகுப்பு) என்னும் நூல்களை வெளியிட்டார். நாடக ஆசிரியரான இவர், சந்திப்பு என்னும் வானொலி நாடகத்தையும் நூலாக வெளியிட்டார். மூப்பனாரைப் பாடுகின்றேன், அண்ணாவின் சிந்தனைகள் (தொகுப்பு), விழித்தெழுவோம் தொகுப்பு), பாரதியார் வாழ்க்கைச் சுருக்கம், கட்டுரைகளும் கடிதங்களும், நெஞ்சை அள்ளும் சிலம்பில் நினைவை அள்ளும் மாதவி. இலக்கியத்தில் நாம், பாலும் தெளிதேனும்(அகமும் புறமும் சார்ந்த நூல்), பதிப்பகச்செம்மல் க. கணபதி (வாழ்க்கை வரலாறு) என்பன இவரின் பிற நூல்களாகும். முன்னரே குறிப்பிட்டுளள **‘புரட்சித் தலைவி ஒரு புறநானூறு’ நூலுக்கு 2011இல் தமிழக அரசின் முதல் பரிசு** கிடைத்தது.

2018 இல் சிங்கப்பூரில் சிங்கப்பூர் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் சார்பில் ‘**தமிழவேள் கோ.சாரங்கபாணி பிள்ளைத் தமிழ்**‘ நூலை வெளியிட்டார். இந்நூலில் காப்புப்பருவத்தில் கடவுளர்களைப் பாடாமல், தமிழ்த்தாய், திருவள்ளுவர், இளங்கோ அடிகள், கம்பர், பாரதியார், பாரதிதாசன்,கண்ணதாசன், குன்றக்குடி அடிகளார், இலீகுவான் கியூ, பெரியார், காமராசர், பேரறிஞர் அண்ணா, கலைஞர், எம்சியார் ஆகியோரை முன்னிறுத்திப் பாடினார்.

**விருதுகள்**

சாந்தா பதிப்பகத்தின் ‘மலர்மாமணி’ விருது(1987), வி.சி.பி. சந்தனம்மாள் அறக்கட்டளையின் கவிதை இலக்கிய விருது(1991), திருக்குறள் நெறிபரப்பு மையத்தின் ‘திருக்குறள் நெறித்தோன்றல்’ விருது(1992), தமிழக அரசின் பாவேந்தர் பாரதிதாசன் விருது(1993), பன்னாட்டுத் தமிழுறவு மன்றத்தின் ஐந்தாம் மாநாட்டில் வழங்கிய ‘தமிழ்ப்பணிச் செம்மல்’ விருது(2002),சென்னைத் தமிழ் எழுத்தாளர் கழகத்தின் ‘இன எழுச்சிக் கவிஞர் விருது’(2009), சிங்கப்பூர் மாதவி இலக்கிய மன்றத்தின் ‘மாதவி இலக்கிய விருது’(2009). 2018இல் மலேசிய பன்னாட்டுத் தமிழுறவு மன்றச் சார்பில் ‘புலவரேறு விருது’ முதலான விருதுகள் இவரை அணி செய்வன.

இவையல்லாமல், பல்வேறு அமைப்புகள் இவருக்கு இனமானச் செம்மல், இனமானப் புலவர், எழுச்சி நடைக்கவிஞர், மலர் மாமன்னன், கவிக்குன்றம், புலவர்மாமணி போன்ற விருதுகளை வழங்கியுள்ளன.

**குடும்பம்**

அருணாசலம் – வெள்ளையம்மாள் இணையரின் திருமகனாக வைகாசி 28, 1969 / 10.06.1938 அன்று திருச்சி மாவட்டம், இலால்குடி வட்டம், பெருவளப்பூரில் பிறந்தார். தந்தை  கோனேரி அருணாசலம் நெடிது உயர்ந்த தோற்றத்தால் நாடகத் துறையில் புகழ்பெற்ற நடிகராகத் திகழ்ந்தார். அருணாசலக் கவிராயரின் இராம நாடகக் கீர்த்தனை நாடகத்தில் இராமனாக நடித்துப் போற்றப்பட்டார். தமக்கை முத்துப்பேச்சி, தங்கை செல்லம்மாள்.

மனைவி விசயலட்சுமி. இவர்களது திருமணம்  சிந்தனைச் சிற்பி சி.பி. சிற்றரசு தலைமையில் 1963இல் நடந்தது. மனைமாமணி விசயலக்குமி என்று போற்ற வாழ்ந்து மறைந்தவர். மூத்த மகன் மாமுடிச்சோழனுக்கு 1996இல் நாவலர் இரா. நெடுசெழியன் தலைமையிலும், 2001இல் இளைய மகன் மணிமுடிச்சோழனுக்கு  மதிப்புமிகு எசு.டி சோமசுந்தரம் அவர்கள் தலைமையிலும் ‘சாதி மறுப்புத் திருமணங்கள்’ செய்து வைத்தார். மூத்த மருமகள் முனைவர் மணிமேகலை; பேத்தி பொறி.சோழமாதேவி’

இளையமருமகள் தீபா’ பேரன் கவின், பேத்தி காவியா.

“**எனக்கு நான் வாழ்வதிலோர் இன்பம் இல்லை, இருந்து நான் வாழ்வதெல்லாம் தமிழுக்காக**” என்பதைக் கொள்கையாகக் கொண்டு மூச்சு பேச்சு முழக்கம் யாவும் தமிழ் என வாழ்ந்து காட்டினார்.

பள்ளி வாழ்க்கையில் ஏற்பட்ட பொதுநல வேட்கை நாளும் வளர்ந்ததே தவிரத் தளரவில்லை. பள்ளிப்பருவத்தில் உள்வாங்கிய **தமிழ் உணர்வினாலும்  வைரம் பாய்ந்த கொள்கை உறுதியாலும்   கேட்டார்ப் பிணிக்கும் சொற்பொழிவாளராக, பாவேந்தர்மரபுக் கவிஞராக, திராவிட இயக்க இதழாளராக, இலக்கிய நிகழ்ச்சிகளின் அமைப்பாளுநராக. உலகளாவியமாநாடுகளின் ஏற்பாட்டாளராக, என்றும்  வாடாத மாநாட்டு மலர்களை**

உருவாக்கிய  மலர் மாமணியாக. புலவரேறாக இந்த வையகம் உள்ளவரை புகழ்மணம் கமழ  மக்கள் உள்ளத்தில்  நிலைபெற்று வாழ்வார்.

*-----இலக்குவனார் திருவள்ளுவன்*






**பிரிந்து மறைந்தது முறையா ஐயா?**

*அன்பே உருவாய் ஆட்கொண் டீரே*

*பண்பின் வடிவாய்  எமைக் கவர்ந்தீரே*

*நட்பின் இலக்கணம் கற்பித்தீரே*

*பிரிய இயலாப் பரிவின் உருவே*

*பிரிந்து சென்றிட எப்படி ஒப்பினீர்?*

*காலம் முழுமையும் கட்சிக்கு  உழைத்தீர்!*

*காலணாப் பயனும்  கருதா மனத்தீர்!*

*திராவிட இயக்கப் பாவலர் அணியில்*

*முன்னணி  வரிசை  முதல்வர் நீவிர்!*

*அண்ணா கலைஞர் பேராசிரியர்*

*எந்நாளும் நீர் போற்றிடும் நாவலர்*

*அனைவரும்  உமது அருமை அறிவரே?*

*மாநாட்டுமலர் என்று எண்ணினால்*

*கூப்பிடு புலவரை என்றே அனைவரும்*

*ஆர்த்திடும் வகையில்  ஆற்றினீர்  பணிகள்!*

*சுரதா  மகிழ்ந்து போற்றும் கவிஞராய்*

*மரபின் மாண்பை  உணர்த்தும் புலவராய்*

*அருமைக் கவிதை ஆயிரம் வழங்கினீர்!*

*செருக்கும் தருக்கும் நிறைந்த உலகில்*

*அடக்கம் ஒன்றே  நெறியெனக் கொண்டீர்!*

*அகத்தே கருத்துப் புறத்தே மிளிரும்*

*வெளிச்சப் புள்ளிகள் மலிந்த உலகில்*

*வாய்மை நேர்மை தூய்மை போற்றினீர்!*

*வள்ளலார் வழியில் வாழ்வை நடத்தினீர்!*

*துணைவியார்  மறைந்த  துயர்மிகு வாழ்வில்*

*இனிமேல் இடர் ஏன் என நினைத்தீரோ?*

*தொற்று  மிகுந்த  சுற்றுச் சூழலில்*

*இலக்கிய நிகழ்ச்சி ஏதும் இல்லாமல்*

*வெற்று வாழ்வு  வேண்டாம் என்றா*

*பற்று நீங்கிப் பறந்தீர் ஐயா?*

*உம்மை  இழந்து உயிரைப் பேணிடும்*

*உறுதி  எமக்குத் தேவை என்றே*

*சொல்லிக் கொள்ள  மனமும் இன்றிப்*

*பிரிந்து மறைந்தீர்! முறையா ஐயா?*

*உங்கள் அருமை பெருமை அறிந்த*

*எமக்கு வெறுமை  வாழ்வை வழங்கினீர்*

*அழுது அரற்றினால் அவலம் மறையுமா?*

*ஒப்புக்கு அழுது மறந்து போக*

*நாங்கள் என்ன நாடக நண்பர்களா?*

*நாவலர் நூற்றாண்டுவிழா பார்க்காமல்*

*நல்லுயிர் நீத்திட  ஏன் விரைந்தீரோ?*

*—முனைவர் மறைமலை இலக்குவனார்*

# இலக்குவனாரும்  இளஞ்செழியனாரும்

**தமிழியக்கத் தலைமைப் போராளி பேராசிரியர் இலக்குவனாருடன்  என் முதல் சந்திப்பு!**

**05.02.1967**

1.மீசைவைத்த இலக்குவனார்! அடடா,அந்த
மேதையின்மேல் எனதுள்ளம் வைத்த அன்போ,
ஓசைவைத்த கடலினும்   பெரிய தாகும்!
உண்மைவைத்த நெஞ்சுடையார் தமிழ்மேல் அன்னார்
ஆசைவைத்த தைப்போலே வைத்த வர்,யார்?
ஆவியையே தமிழ்மேலே வைத்த செம்மல்!
மாசைவைத்த மனமுடையோர் அவர்மேல் இங்கே
மாறிமாறி வைத்ததுன்பம் மலைநி கர்க்கும்!

2.நாடகப்பே ராசிரியர் என்றன் ஆசான்
நடராச னார்க்கே, யாம் விழாஎ டுத்தோம்!
பாடுபுகழ் கல்லக்குடி  என்னும் ஊரில்!
பாராட்டிப் பேசுதற்கே கி.ஆ. பெ.வி.
நாடுபுகழ் இலக்குவனார் இருவ ரையும்
நல்லதொரு மகிழுந்தில் அழைத்துச் சென்றேன்!
ஓடுமணிப் பொழுதெனக்குத்   தெரிய வில்லை!
உரையின்பப் படகினிலே பயணம் செய்தோம்!

3.இலக்குவனார் சந்திப்பும் திருச்சி யில்தான்!
எனதழைப்பை ஏற்றந்த மான வேங்கை,
கலக்கவந்த மேடையினை என்ன சொல்வேன்?
கருத்துமணிச் சொற்பொழிவைப் படைத்தார் அங்கே!
‘இலக்கியனார்’ என்றவரை அழைத்தால் என்ன?
எழுச்சியுரை ஆற்றுவதில் இமயம் ஆவார்!
இலக்கணமாய் வாழ்ந்திருந்தார்! அவர்என் றைக்கும்
இலக்கியமாய் வாழ்ந்திருப்பார் தமிழர் நெஞ்சில்!

4.மடல்தொடர்பும் அவருடன்நான் வைத்தி ருந்தேன்!

மடைதிறந்த வெள்ளமவர் கவிதை ஓட்டம்!

கடல்நிகர்த்த பேரறிஞர்அண்ணா மீது,

கவிதைவரைந் தனுப்பிவைத்தார் என்’மு கில்’க்கே!

அடலேறாய் அவரைத்தான் பார்த்தோம் நாமே!

அனல்காற்றாய் எழுதியவர் தமிழைக் காத்தார்!

தொடமுடியா அறிவு வானம் அவர்என் பேன்நான்!

தூயவர்என் மனவானில் நிலவாய் ஆனார்!

**நண்பர்களுக்கு, நன்றியுடன்**

**நல்வணக்கம்.**

**இராம.நடராசனார்**, கல்லக்குடி உயர்நிலைப் பள்ளியில் அன்பால் அறிவால் ஆற்றலால் நாடகப் படைப்புத் திறனால் ஆசிரியர் மாணவர் அனைவர் உள்ளங்களிலும் அரியணை போட்டு வீற்றிருந்தவர். சமுதாயச் சீர்திருத்த நாடகங்கள் எழுதி, அனைத்தையும் மேடையேற்றியவர். நடிகை மனோரமா போன்றவர்கள் கல்லக்குடி வந்து, அவர் நாடகங்களில் நடித்திருக்கிறார்கள். எனவே கல்லக்குடி பள்ளியில் படித்த பழைய மாணவர்களாகிய நாங்கள் கல்லக்குடியில் ஆசிரியர் நடராசனார்க்குப் பாராட்டுவிழா நடத்தி,”நாடகப் பேராசிரியர்”என்ற விருதினை முத்தமிழ்க்காவலர் திருக்கரத்தால் அவருக்கு வழங்க வைத்தோம்.

அப்போது திருச்சியில் நான் இருந்தேன். நானும் என்னுடன் படித்த என் கெழுதகை **நண்பர் வெ.இராமுலு** அவர்களும் பெருமுயற்சி மேற்கொண்டு, நடராசனார் பாராட்டுவிழாவைப் பலரும் பாராட்டும்படி நடத்தினோம். **முத்தமிழ்க்காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம்** அவர்களுடன் நான் நன்கு பழகிக் கொண்டிருந்தவன் என்ற முறையில், அவரிடம் நேரில் சென்று விழாவிற்கு அவர் இசைவைப் பெற்றேன்.

திருச்சியில் அவர் வீட்டுக்கும் நான் குடியிருந்த வீட்டுக்கும் இடையில் இருந்த தூரம் 200 அடிகள்தாம்! நான் குடும்பத்துடன் இருந்த இடம், திருச்சி பெரிய தெருவிலிருந்து பிரியும் பெரிய சௌராட்டிரா தெரு! **முத்தமிழ்க் காவலரின்** இல்லம், அங்கிருந்து தொடரும் தையல்காரத் தெரு! அடிக்கடி அவரைப் பார்க்கச் சென்று, அமர்ந்து உரையாடி, **அவரிடமிருந்து நிறையக் கற்றுத் திரும்புவேன்! அவர்தான் தமிழ்! தமிழ்தான் அவர்**!

அப்போது ‘இந்தி எதிர்ப்புப் போரின் தந்தை’ எனக் குற்றம் சாட்டப்பட்டு சிறை சென்று வந்த **பேராசிரியர் சி.இலக்குவனார், மீண்டும் இந்தியப்பாதுகாப்புச் சட்டப்படி கைது செய்யப்பட்டு விடுவிப்பிற்குப் பின்னர் மதுரையில் இருந்து குறள்நெறி இதழை நடத்திக் கொண்டிருந்தார்.** பேராசிரியர் இலக்குவனார் அவர்களிடம் மடல்வழியாக இசைவு பெற்றேன். இலக்குவனார் முதல்நாள் இரவே திருச்சி வந்து விடுதியில் தங்கியிருந்தார்.

பெருமகனார் இருவரையும் திருச்சியிலிருந்து மகிழுந்தில் கல்லக்குடிக்கு அழைத்துச் சென்ற அனுபவமே ஒரு தனிச்சுவை! புதுச்சுவை! சிறப்பான அந்த விழாவிற்குச் சிகரம் வைத்ததுபோல், எனது கைவண்ணத்தில் **தாள்மலர் ஒன்றையும் தவழவிட்டேன்.** நான் முதன்முதல் உருவாக்கிய முத்துமணி மலர் அதுதான்.

**நடராசனாரின் நாவிலும் நெஞ்சிலும் நான் நடமாடும் உருவமாக இருந்தேன்**. அப்படி என்னை நேசித்தார்! என் எழுத்துகளை வாசித்தார். சென்னையில் எனது வீட்டிற்கு வந்து, என்னுடன் தங்கியிருந்து ஆசிரியர் மாணவருக்கான இடைவெளிக்கப்பால் என்னைப் பெரிதும் மதித்துப் பழகிய ஏந்தல் அவர்!

**நான் மறக்கவே முடியாத மலை மாணிக்கம் அவர்!**

ஆசிரியரானால் அவர்போல் ஆசிரியர் ஆகவேண்டும்! வாழ்க அவர் புகழ்!

ஆசிரியப்பெருந்தைகயைச் சிறப்பிக்கும் வாய்ப்பில் தமிழ்ப்போராளி பேராசிரியர் சி.இலக்குவனாரைச் சந்திக்கும் முதல் வாய்ப்பு கிடைத்தது நான் பெற்ற பெரும்பேறு.

அவரது புகழ் நினைவில் ***மலர்மாமணி, புலவரேறு பெ.அ. இளஞ்செழியன்.—***

(அகரமுதல-இணையதளம்)

## மலர்மாமணி பற்றிய மிகவும் பொருத்தமான ஓர் அறிமுகம்

இலங்கையில் 1992-ஆம் ஆண்டு இலங்கைத் தமிழர் தலைவராகவும் மலையகத் தமிழர்நலக் காவலராகவும் அமைச்சராகவும் விளங்கிய திரு.தொண்டைமான் அவர்களின் முத்துவிழாவின்போது விழாமலரைத் தொகுத்து வழங்கும் ஆசிரியராகப் பணியாற்றினார்.அம் மலரில் அவரைப் பற்றிய அறிமுக விளக்கமாகக் கூறப்பட்டுள்ளவை எவ்வித உயர்வுநவிற்சியும் இல்லாமல் அவரது பணியின் சிறப்பைக் கூறுகிறது.
அதனை அப்படியே இங்கே உங்கள் பார்வைக்கு வழங்குகிறோம்.

காகித மலர்களால் காவியங்கள்படைப்பவர். இதுவரை இருபது மலர்களின் ஆசிரியர். பூக்கவைக்கும் மலர்களில் புதுமை படைப்பவர். புதுமையில் புதுமை படைக்கும் இந்தப் புலவர் பிறருக்காகத் தாள் மலர்களைப் படைப்பதுடன் தனக்காக நூல் மலர்களையும் தந்திருப்பவர்; எழுத்து, பேச்சு கவிதை, நாடகம்-எல்லாம் இவருக்குக் கை வந்தவை. கருவூலங்களாய் இருப்பவை. எதையும் திருத்தமாகவும் பொருத்தமாகவும் செய்பவர். சிறப்பைப் பெருக்க மலரின் செலவைப் பெருக்கும் இவரின் செயல்முறைகள் சிற்பங்களையே வெல்லும்!

சிறந்த கல்வியும் சேமித்த புலமையும் கொண்ட இந்த இளஞ்செழியனைப் புரிந்து கொண்டவர்கள்பூரிப்பார்கள். புகழ்வார்கள். புரிந்து கொள்ளாதவர்களே பொறாமைப்படுவார்கள். தொண்டு தமிழுக்கென்றே அதிலே தோய்ந்து போனவர்; மக்கள் தலைவர் தொண்டமான் அவர்களின் முத்துவிழா மலரை மகத்தான ஒரு சாதனையாக எடுத்துக்கொண்டு, மல்லிகைக் கொல்லையாய் மலரவைத்திருப்பவர்.'பா' என்றால் வெண்பா, 'பூ' என்றால் தாமரை, 'மலர்' என்றால் இளஞ்செழியன்.மலரால் முதன் முதலில் மலேசியாவில் புகழ் பெற்ற இவர் பின்னர் மொரீசியசிலும் புகழ் பெற்று, இப்போது சிங்கை, இலங்கை நாடுகளிலும் புகழைப் பொறிக்கிறார்.



பாரதிதாசன் பெயரால் பாவேந்தர் விருது தமிழக அரசால் 1978-ஆம் ஆண்டு முதல் வழங்கப்பட்டு வருகிறது. ஆண்டுதோறும் தமிழ்க் கவிஞர் ஒருவரைத் தேர்ந்தெடுத்துப் பாவேந்தர் பாரதிதாசன் விருது வழங்கப்படுகிறது. 1993 – ஆம் ஆண்டு மாபெரும் கவிஞர் புலவர். பெ. அ. இளஞ்செழியன் தமிழ்நாட்டு அரசால் பாவேந்தர் விருது வழங்கிச் சிறப்பிக்கப்பெற்றார்.






## அண்ணன், தம்பியை என்ன பாராட்டுவது?

**டாக்டர் இரா.நெடுஞ்செழியன் எம்.ஏ.டி.லிட்.,**

1993ஆம் ஆண்டுக்கான பாவேந்தர் பாரதிதாசன் விருதினைப் பெற்ற புலவர் இளஞ்செழியன் அவர்களைப் பலரும் இங்கே பாராட்டிப் பேசினார்கள். பலரும் பாராட்டப் பாராட்ட அதனைக் கேட்டுக் கேட்டு மகிழ்ச்சி பெற்றேன். எல்லோருடைய மகிழ்ச்சியிலும் பங்கு பெறுவதே என் நோக்கமாகும். நான் பாராட்டிப் பேச வேண்டிய தேவையில்லை. அண்ணன், தம்பியை என்ன பாராட்டுவது? அதுவும் நெடுஞ்செழியன் இளஞ்செழியனைப் பாராட்டித்தான் தீரவேண்டும் என்பதில்லை.

புலவர் இளஞ்செழியன் பாவேந்தர் பாரதிதாசன் விருது பெறுவதற் கான அனைத்துத் தகுதிகளும் உடையவர். புலவர் இளஞ்செழியன் புகழ் பெற்ற கரந்தைத் தமிழ்ச்சங்கத்தில் முறையாகக் கற்று, முறையாகத் தேர்ந்து, முறையாக வளர்ந்தவர் ஆவார். அவர் புலவர் மட்டுமல்ல, எல்லோர் உள்ளங்களையும் கொள்ளை கொள்ளத்தக்க கவிதைகளையும் எழுதுகிற கவிஞர் ஆவார். உரைநடை எழுதுவதிலும் தனித்தன்மை வாய்ந்தவர். இவை மட்டும் அல்லாமல், புலவர் இளஞ்செழியன் ஒரு குறிப்பிட்ட கொள்கைக்காகவே உழைத்து வருபர்.

எந்த ஒன்றைச் செய்தாலும் அதைத் திறம்படவும் பிறர் பாராட்டும் படியும் செய்வதிலே புலவர் இளஞ்செழியன் கைதேர்ந்தவர். பாவேந்தர் பாரதிதாசன் விருது பெறுவதற்கு என்னென்ன பொருத்தங்கள் வேண்டுமோ, அவ்வளவு பொருத்தங்களும் உள்ளவர் இளஞ்செழியன் என்பதால்தான், என் பரிந்துரையையும் ஏற்று, மாண்புமிகு புரட்சித் தலைவி ஜெயலலிதா அவர்கள், தமிழக அரசின் சார்பில் இந்த ஆண்டுக் குரிய (1993) பாவேந்தர் விருதினைப் புலவர் இளஞ்செழியன் அவர்களுக்கு வழங்கியுள்ளார்கள்.

(4-8-1993 சென்னையில், பாவேந்தர் விருது பெற்ற புலவர் இளஞ்செழியனுக்கு நடந்த பாராட்டு விழாவில்)

விஜயலட்சுமி பதிப்பகம்

அறிஞர் அண்ணாவுடன் மலர்மாமணி



நாவலருடன்



பேராசிரியருடன்








துணைவியாரை மனைமாமணி எனும்சிறப்புப் பெயரால் அழைப்பார்.அம்மாவின் நினைவேந்தலில் படத்திறப்பு:புலவருடைய கெழுதகை நண்பர் திரு.இராசமோகன் அவர்கள் படத்தின் அருகில்





கல்விச்செம்மல்,சாந்தா பதிப்பக நிறுவனர் திரு.கணபதி நாட்டார் படத்திறப்பு



திரு.இராம.வீரப்பனாருடன்



பெருவளப்பூர் திருமணமண்டபம்